இயேசுவுக்கே புகழ்! மரியே வாழ்க!

"புதுமைகளின் நாயகியாம்"

# பரிசுத்த பரலோக அன்னை ஆலயம்

## பிரகாசபுரம்







# ஆலய வரலாறு

1954ஆம் ஆண்டு நமது பரிசுத்த பரலோக அன்னை ஆலயத்தின்
கட்டுமானப் பணியின்போது – வெளிப்புற தோற்றம்




1954ஆம் ஆண்டு கட்டுமானப்
பணியின்போது – உட்புறத் தோற்றம்



1983ஆம் ஆண்டு கட்டப்பட்ட
நூற்றாண்டு கெபியின் தோற்றம்



பிரகாசபுரம்
பரிசுத்த பரலோக அன்னை ஆலய வரலாறு

*முதல் பதிப்பு:*
*ஆகஸ்ட் 2023*

*பிரதிகள் எண்ணிக்கை:*
*1000*

*விற்பனைக்கு அன்று*

தொகுத்து வெளியிடுவோர்:
St. மேரீஸ் கிளப், பிரகாசபுரம்.

புகைப்பட உதவி
திரு. A. தேவாசீர்வாதம் (ஆசிரியர்)

## இனிய வாழ்த்துக்களும் ஆசியும்...

தூத்துக்குடி மறை மாவட்டத்தில் நூறு ஆண்டுகளைக் கடந்துள்ள பல பங்குகளில் பிரகாசபுரம் பங்கானது இறை அன்னைக்குப் புகழ் சேர்க்கும் ஓர் பாரம்பரியமான பங்காக விளங்குகிறது என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

இத்தகைய பெருமைமிகு பங்கின் காவலியாம் பரிசுத்த பரலோக அன்னைக்கு இம்மண்ணில் ஓர் ஆலயம் உருவானதின் வரலாற்றைக் கூறும் **"ஆலய வரலாறு"** என்ற இந்த படைப்பு சிறந்த முறையில் வெளியாவதற்கு உதவியவர்களுக்கு வாழ்த்துக்களும், நன்றிகளும் உரித்தாகுக.

இந்த அரிய படைப்பு வெளியாவதில் நான் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

அனைவருக்கும் என் அன்பு ஆசீர்!!

பிரகாசபுரம்
14.08.2023

அருட்பணி. **தா. சலேட் ஜெரால்ட் அடிகளார்**
பங்குத்தந்தை – பிரகாசபுரம்



பார்போற்றும் விழாவாம்
பரலோக அன்னையின் விழாவாம்
நூற்றாண்டைக் கடந்த
நூற்றுநாற்பத்து நான்காம் ஆண்டு விழாவாம்
முன்னோர்களின் முன்னேற்பாடாம்
மூதாதையர்களின் முத்தான உழைப்பாம்
பங்குத் தந்தையர்களின்
பாங்கான பங்களிப்பால்
முத்துநகரின் முத்தாய்ப்பாய்
முத்தான பங்காய் உதித்ததாம்
புண்பட்ட உள்ளங்களை புறந்தள்ளாமல்
பண்படுத்த வந்த பரலோகத் தாய்
பார்புகழ நிற்கின்றாள் நம் தாய்
அருட்தந்தையர்களின் அருட்பணியால்
அளவில்லா வளர்ச்சி கண்டது நம் பங்கு
தாயின் தயவின் கருணையால்
தஞ்சம் அடைகின்றோம் தரணி மக்கள்
கருணை கூர்ந்து,
கண்ணின் மணியாகக் காத்திடுவாய்
என்றும் எம்மைக் காக்கும் அன்னையாம்
பரலோக அன்னைக்கே அர்ப்பணம்
பாரில் அனைவருக்கும் சமர்ப்பணம்

**இயேசுவுக்கே புகழ்! மரியே வாழ்க!!**



# ஆலய வரலாறு

## கிறிஸ்தவம்:

நம் இந்திய மண்ணில் ஏக அப்போஸ்தலிக்க கத்தோலிக்க திருச்சபையானது கிறிஸ்துவின் பன்னிரு சீடர்களில் ஒருவரான புனித தோமையாரால் கி.பி. முதலாம் நூற்றாண்டிலேயே வேரூன்றி விட்டது என்பது மறுக்கமுடியாத வரலாற்று உண்மை. ஆயினும் மிகப்பெரிய வளர்ச்சியானது கி.பி. 15,16 ஆம் நூற்றாண்டில்தான் உச்சத்தை அடைந்தது எனலாம்.

நம் பாரத நாட்டில் வேரூன்றி வேகமான வளர்ச்சி கண்ட அந்தக் காலக்கட்டத்தில்தான் தென் மாநிலங்களான தமிழ்நாடு, கேரளாவிலும் வேகமெடுத்தது. அதிலும் குறிப்பாக தமிழ்நாட்டில் ‘முத்துக்குளித்துறை மாநகர்’ என்று போற்றப்படும் நம் ‘தூத்துக்குடி மறைமாவட்டம்’ முதன்மை இடத்தைப் பெற்றது என்றால் மிகையாகாது.

## தூத்துக்குடி மறை மாவட்டம்:

தொடக்கத்தில் தூத்துக்குடியானது மதுரை மிஷனுக்கு கீழ்தான் செயல்பட்டு வந்திருக்கின்றது. ‘மதுரை மிஷன்’ என்பது சேசு சபை குருக்களால் (Jesuits) திருச்சியை தலைமையிடமாகக் கொண்டு மதுரையைச் சுற்றி உள்ள பகுதிகளை உள்ளடக்கிய பணித்தளமாக அமைந்து இருக்கின்றது.

மதுரை மிஷன் என்பது 1606ல் இந்தியாவிற்கு வருகை தந்த சேசு சபைக்குருக்களால் தொடங்கப்பட்டது ஆகும். 1886 ஆம் ஆண்டு செப்டம்பர் 1ல் ‘மதுரா மறை மாவட்டமாக’ தரம் உயர்த்தப்பட்டது. இதே மறைமாவட்டம் 1887 ஜுன் 7 முதல் ‘திருச்சினோபொலி மறைமாவட்டம்’ எனப்பெயர் மாற்றப்பட்டு இயங்கி வந்துள்ளது.

1923 ஜூன் 12ல் தூத்துக்குடி தலைமையில் தனி மறைமாவட்டம் உதயமானது. தூத்துக்குடி மறைமாவட்டமே இந்தியாவின் முதல் லத்தீன் ரீதி (Latin Rite) மறைமாவட்டம் ஆகும். நம் மறைமாவட்டத்திற்கு பின்னரே மதுரை மறை மாவட்டம் (1938ல்) உதயமாகி உள்ளது.

தூத்துக்குடி மறைமாவட்டத்தின் ஓர் அங்கமாக திகழ்ந்துள்ள நம் பிரகாசபுரம் பங்கின் வரலாற்றை சற்று விரிவாக இங்கே காண்போம்.

## நாசரேத்:

கி.பி. 18ஆம் நூற்றாண்டுக்கு முன்பு நம் பிரகாசபுரம் ஊரானது 'சாண்பத்து' என்று அழைக்கப்பட்ட நாசரேத்தின் ஒரு பகுதியாக இருந்துள்ளது. நாசரேத்திற்கு 'தெற்கு முதலூர்' என்ற மற்றொரு பெயரும் இருந்துள்ளது. அக்காலக்கட்டத்தில் இப்பகுதியில் 4000க்கும் மேற்பட்ட மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர்.

1805 ஆம் ஆண்டு முதல் 'சாண்பத்து' என்ற பெயர் இப்பகுதியில் வாழ்ந்த கிறிஸ்தவர்களால் 'நாசரேத்' என மாற்றப்பட்டு அன்று முதல் இன்று வரை அப்பெயராலேயே அழைக்கப்பட்டு வருகின்றது.

இந்த வேளையில் தான் 1875ல் கனோன் ஆர்தர் மர்காஷிஸ் ஐயர் அவர்கள் இந்தியாவிற்குள் காலடி எடுத்து வைத்தார்கள். அதிலும் குறிப்பாக 1876ல் அன்றைய தின்னவேலி மாவட்டத்தில் (திருநெல்வேலி) இடம் பெற்றிருந்த நம் நாசரேத் மாநகருக்கு வருகை தந்தார்கள். அன்னாரின் வரவால் இப்பகுதி முழுவதுமே மாபெரும் வளர்ச்சி கண்டது. குறிப்பாக மாணவ - மாணவியர்களுக்கென்று தனித்தனியாக கல்விச்சாலைகளை அமைத்து சாதி, மத பேதமின்றி அனைத்து மாணவர்களுக்கும் தரமான கல்வி கிடைக்கச் செய்தார். மேலும் மருத்துவமனை, அனாதை இல்லங்கள், தொழிற்பயிற்சி

கூடம் அமைத்து இப்பகுதி மக்களின் வாழ்வில் ஒளியேற்றி வைத்தார். அதுமட்டுமல்ல தின்னவேலி (திருநெல்வேலி) – திருச்செந்தூர் இரயில் பாதை அமைத்திட முக்கிய காரணியாகத் திகழ்ந்துள்ளார் என்பதில் ஐயமில்லை. அதனால்தான் அவர் 'நாசரேத்தின் தந்தை' என்று இன்றும் அனைவராலும் அழைக்கப்பட்டு வருகிறார்.

## பிரகாசபுரம்:

பிரகாசபுரம் என்பது தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள நாசரேத் மற்றும் மூக்குப்பீறி இடையில் அமைந்துள்ள ஒரு ஊராகும். திருநெல்வேலி – திருச்செந்தூர் இரயில் பாதை நாசரேத் பிரகாசபுரத்தை இரண்டாக பிரித்துள்ளது. தமிழ்நாட்டின் பாலைவனம் என அழைக்கப்படும் குதிரைமொழி தேரியும் அருகில் உள்ளது.

பிரகாசபுரம் தொடக்கக் காலத்தில் 'புதூர்' என்றே அழைக்கப்பட்டு வந்துள்ளது. நாசரேத் அருகில் இருந்ததால் 'சாண்பத்து புதூர்' என்று அழைத்து வந்துள்ளனர். 1831 ஆம் ஆண்டில் தான் 'புதூர்' என்ற பெயரை மாற்றி 'பிரகாசபுரம்' என்ற புதிய பெயரை வைத்துள்ளனர். அன்று முதல் இன்று வரை அவ்வாறே அழைக்கப்பட்டு வருகின்றது.

## பரிசுத்த பரலோக அன்னை ஆலயம்:

இம்மண்ணில் கத்தோலிக்க மதத்தைப் பின்பற்றிய நம் முன்னோர்கள் இறைமகனின் தாயாம் புனித கன்னிமரியாளைப் பாதுகாவலியாக ஏற்றுக்கொண்டதுடன் அன்னையின் விண்ணேற்பை அகிலமே அறியும்வகையில் நம் அன்னைக்கு பரலோக மாதா என்ற பெயரைத் தாங்கிய ஆலயங்களை எழுப்பி மாதாவை மகிமைப்படுத்தியுள்ளனர்.

அதன் அடிப்படையில்தான் வடக்கில் காமநாயக்கன்பட்டியிலும், தெற்கில் வடக்கன்குளத்திலும் இரு பெரு ஆலயங்கள் எழுப்பப்பட்டுள்ளன. இவ்விரு ஊர்களுக்கும் நடுவில் நடுநாயகமாக விளங்கும் வகையில் நம் ஊராம் பிரகாசபுரத்திற்கு புதியதொரு ஆலயம் அப்போதைய நம் முன்னோரால் 18ஆம் நூற்றாண்டில் எழுப்பப்பட்டுள்ளது. முதலில் கூரைக்கோவிலாக நம் தாயின் ஆலயம் காட்சியளித்தது.


மாதிரி வரைபடம்

தற்பொழுது மாதா பெயரில் நம் ஊரின் மையப்பகுதியில் அமைந்துள்ள நூற்றாண்டு கெபிதான் அன்றைய ஓலைக்கூரை கோயில் அமைந்து இருந்த இடமாகும்.

மிகப்பழைமையான காலத்திலேயே மாதாவுக்காக ஆலயம் அமைத்த நம் ஊரைச் சேர்ந்த 14 கத்தோலிக்கக் குடும்பங்கள் 1880 ஆம் ஆண்டு மாதாவுக்காக அமைக்கப்பட்டிருந்த கோவில் கூரையை அகற்றிவிட்டு ஓடு போட்ட மண் கோயிலை உருவாக்கியுள்ளனர். அக்கோவில் அதே ஆண்டு மாதாவின் விண்ணேற்ற நாளான ஆகஸ்டு 15 ஆம் நாளில் அருட்திரு. டையோனிஷியஸ் குஷன் அடிகளாரால் அர்ச்சிக்கப்பட்டு நம் ஊருக்கு அர்ப்பணிக்கப்பட்டது. திருவிழா நாட்களில் திருப்பலிகளும், ஜெபமாலை ஜெபித்தலும் நடந்துள்ளது.



இவ்வாறு மாதா பக்தியில் திளைத்திருந்த நம் முன்னோர்களுக்கும், நம் ஊர்க்கும் மகிமை சேர்க்கும் வகையில் அன்றைய ஆன்மீக குருவாக இருந்த அருட்தந்தை. டையோனிஷியஸ் குஷன் அடிகளார் நம் மக்களின் வாழ்வை உயர்த்தும் வகையில் ஓர் அழகிய பரலோக மாதா சுரூபத்தை கொடையாக வழங்கியுள்ளார்கள். 1880 ஆம் ஆண்டு இலங்கை வழியாக கப்பல் மூலம் பரலோக மாதா சுரூபம்-1, புனித சூசையப்பர்-1, குழந்தை இயேசு-1, என மொத்தம் 3 சுரூபங்கள் தூத்துக்குடிக்கு வரவழைக்கப்பட்டு நம் ஊர்க்கு வந்து சேர்ந்துள்ளன. அப்பொழுது பிரகாசபுரம் சாத்தான்குளத்தின் கீழ் கிளைப்பங்காக செயல்பட்டு வந்திருக்கின்றது.

1887ல் திருச்சி மறைமாவட்ட ஆயர் பார்த்தே ஆண்டகை நமது தாய்ப்பங்கான சாத்தான்குளத்திற்கு வருகை தந்திருந்த போது நம் மண்ணின் மக்களுடைய ஈடுபாட்டைக்கண்டு வியந்து அவர்களின் ஆர்வத்தை வளர்த்தெடுக்க வேண்டும் என்ற நோக்கில் நம் ஊராம் பிரகாசபுரத்தை தனிப்பங்காக செயல்பட உத்தரவிட்டார்கள். பிரகாசபுரம் சாத்தான்குளம் பங்கிலிருந்து பிரிக்கப்பட்டு அருட்திரு. நிக்கோலஸ் சுவாமியிடம் ஒப்படைக்கப்பட்டது.

தூத்துக்குடி மறை மாவட்டம் உதயமாகும் முன்பே நம் ஊர் தனிப்பங்காக பிரகடனப்படுத்தப்பட்டது நம் முன்னோர்களின் ஜெப வாழ்வுக்கு கிடைத்த மாபெரும் பொக்கிஷம் என்றே கூறலாம். 15 கிளைப்பங்குகள் பிரகாசபுரத்தைத் தாய் பங்காகக்கொண்டு செயல்பட்டு வந்திருக்கின்றன என்பது கூடுதல் பெருமை. அதிலும் குறிப்பாக திருவைகுண்டம், சேதுக்குவாய்த்தான், சிந்தாமணி போன்ற பெரிய பெரிய ஊர்களும் நம் பங்கில் இணைந்து செயல்பட்டு வந்திருக்கின்றன.

1895 வரை வெறும் வழிபாடுகள் மூலம் மட்டுமே நடத்தப்பட்டு வந்த நம் திருவிழா அதன்பின்பு சப்பரத்திருவிழாவாக மாறி விட்டது.

ஆம்! நம் ''புதுமைகளின் நாயகியாம்'' பரிசுத்த பரலோக மாதாவை சப்பரத்தில் வைத்து நம் தெருவீதிகளில் தோளில் சுமந்து மாதாவின் புகழைப் பரப்பியுள்ளனர். சப்பரம் நிலை கொள்ளும் இடத்தின் பரப்பளவு பெரிய பரப்பளவைக் கொண்டதாக இருந்தது. 3 சப்பரங்கள் நிறுத்தக்கூடிய அளவில் அதாவது தற்போதைய புனித மிக்கேல் அதிதூதரின் கெபியின் முற்றம் வரையில் அதனுடைய நீளம் இருந்தது குறிப்பிடத்தக்கது.

7ஆம் திருவிழா அன்று புனித மிக்கேல் அதிதூதர் தட்டு சப்பரமும், புனித அந்தோணியார் சப்பரமும், 8ஆம் திருவிழா இந்த இருசப்பரங்களோடு புனித சூசையப்பர் சப்பரமும், 9ம் திருவிழா அன்றும் 10ஆம் திருவிழா அன்றும் இச்சப்பரங்களோடு ''புதுமைகளின் நாயகியாம்'' பரிசுத்த பரலோக மாதா சப்பரமும் ஒன்றன் பின் ஒன்றாக பவனி வருவது கண்கொள்ளாக் காட்சியாக இருந்திருக்கின்றது. அவ்வேளையில் பிற மதச் சகோதரர்களின் கடும் எதிர்ப்பையும் மீறி நம் மாதாவை பவனியாக வீதிகளில் சுமந்து சென்றதாக 'மதுரை மிஷன்' குறிப்பேடு கூறுகிறது.



இவ்வாறு நம் ''புதுமைகளின் நாயகியாம்'' பரிசுத்த பரலோக மாதாவின் புகழும், அருளும் நம் ஊர் மற்றும் ஊரைச்சுற்றியுள்ள கிராமங்களில் வேகமாகப்பரவியது. இந்நிலையில் தான் 1907ல் 'நாசரேத்தின் தந்தை' என அழைக்கப்படும் கனோன் ஆர்தர் மர்காஷிஸ் ஐயர் நோய்வாய்ப்பட்டு படுக்கையில் இருந்தபோது தனது ஜெபஅறையில் வைத்து வணங்கிய இயேசு கிறிஸ்துவின் பாடுபட்ட சொரூபம், பரிசுத்த தேவ அன்னையின் சொரூபம் மற்றும் உயிர்த்த

ஆண்டவரின் சுரூபம் என 3 சொரூபங்களையும் பவனியாக எடுத்து வந்து நம் ஆலயத்திற்கு வழங்கி மாதாவுக்குப் புகழ் சேர்த்துள்ளார்கள்.

1887ல் திருச்சி மறை மாவட்ட ஆயரால் தனி பங்காக அறிவிக்கப்பட்டிருந்தாலும் 1909ல் ஜனவரி மாத இறுதியில் இருந்துதான் முறைப்படி செயல்படத் துவங்கியுள்ளது. முதல் பங்குத்தந்தையாக அருட்தந்தை. E. மாஸ் என்ற சேசு சபைகுரு நியமிக்கப்பட்டிருந்தார்கள். அந்த காலகட்டத்தில் சவுக்கு மரத்தில் குருத்து ஓலை மற்றும் மா இலைகளைக் கட்டி கொடிமரமாக்கி நம் ஆர்.சி. காம்பவுண்டின் நடுவில் (தற்பொழுது கொடிமரம் நிலைநிறுத்தப்பட்டுள்ள இடம்) குழி தோண்டி அதில் மரத்தை நிலை நிறுத்துவது வழக்கமாக இருந்திருக்கின்றது. தாய்க்கொடி மரத்தில் மா இலைகளையும், பிள்ளைக்கொடி மரத்தில் குருத்து ஓலைகளையும் வைத்து கட்டி மரத்தை அலங்கரித்து உள்ளனர். இந்த நிகழ்வும் ஊரில் உள்ள அனைத்து மக்களாலும் சாதி, மத பேதமின்றி ஒரு மிகப்பெரிய சடங்காகவே கொண்டாடப்பட்டு வந்திருக்கின்றது. கொடி மரம் நடும் நிகழ்வும் கொடியேற்றமும் இருபெரும் ஆடம்பர நிகழ்வுகளாக அமைந்து நம் ஊருக்கு பெருமை சேர்த்து வந்திருக்கின்றன. நம் ஊர் மட்டுமல்ல அருகில் உள்ள 20க்கும் மேற்பட்ட கிராம மக்கள் ஒன்றிணைந்து கொண்டாடும் மிகப்பெரிய விழாவாக நம் ஆலயத்திருவிழா திகழ்ந்திருக்கின்றது; இன்றும் திகழ்கிறது என்பது நம் பரலோக தாயின் வல்லமைக்கு சாட்சி என்பதில் ஐயமில்லை.

1913ல் அருட்தந்தை. T. மிக்கேல் அடிகளார் பங்குத்தந்தையாக பணியாற்றிய காலத்தில்தான் முதன்முதலாக நம் ஆலயத்தில் ‘அசனம்’ என்ற அன்னதானம் ஆரம்பமானது. அக்காலக்கட்டத்தில் மக்களின் வறுமையைக் கணக்கில் கொண்டும், தானங்களில் சிறந்தது அன்னதானம் என்ற கூற்றிற்கிணங்கவும் இந்நிகழ்வு நம் ஆலயத்தில் தொடங்கப்பட்டிருக்கிறது. மேலும் அதே ஆண்டில்தான் அருட்தந்தை. T. மிக்கேல் அடிகளாரால் புதிய

ஆலயத்திற்கு (இப்போது உள்ள பரலோக மாதா ஆலயம்) அடிக்கல் நாட்டப்பட்டது. புதிய ஆலயம் எழுப்பப்படும்வரை நம் பழைய கோயிலிலேயே வழிபாடுகள் நடந்தேறின.

நம் பகுதி மாணவச்செல்வங்களின் அறிவுப்பசியைப் போக்க வேண்டும் என்ற உயரிய நோக்கில் 1929ஆம் ஆண்டு நம் ஊரில் 1 முதல் 5-ம் வகுப்பு வரை பயிலும் வகையில் ஓர் தொடக்கப்பள்ளி தொடங்கப்பட்டு அதற்கு மாதாவின் பெயரால் புனித மரியன்னை தொடக்கப்பள்ளி என பெயர் சூட்டப்பட்டது. 1939-ல் புனித மரியன்னை தொடக்கப்பள்ளியானது தரம் உயர்த்தப்பட்டு 1-8ம் வகுப்பு வரை பயிலும் நடுநிலைப்பள்ளியானது. தற்பொழுது



St. மேரீஸ் மஹால் இருக்கின்ற இடத்தில்தான் பள்ளியானது செயல்பட்டு வந்தது. இப்பள்ளியில் நம் ஊர் மற்றும் அருகில் உள்ள கிராமங்களில் இருந்து வந்த மாணவர்கள் கல்வியைப் பெற்று தங்கள் வாழ்க்கை தரத்தை உயர்த்தி உள்ளனர். அன்றைய மாணவர்களை குருக்களாகவும், கன்னியர்களாகவும், ஆசிரியர்களாகவும், அலுவலகப் பணியாளர்களாகவும், வணிகர்களாகவும், செல்வந்தர்களாகவும், அரசியல் தலைவர்களாகவும் உயர்த்திய பெருமை நம்பள்ளிக்கு உண்டு என்பதை எவரும் மறக்க, மறுக்க முடியாது. அக்காலக்கட்டத்தில் நமது

பள்ளியில் பணியாற்றிய ஆசிரியர்களையும், கன்னியர்களையும், குருக்களையும் நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறோம்.

பழைய கோவிலுக்கு தெற்கே தர்மவளாகம் என்ற ஒரு இடம் இருந்துள்ளது. அங்கு புனித வெள்ளி அன்று மக்களுக்கு தர்மபயினி (பதநீர்) கொடுக்கும் முறை வழக்கத்தில் இருந்துள்ளது. 3 தாழி நிறைய பதநீர் கொண்டு வந்து கொடுப்பது வழக்கம்.

பழைய கோவிலுக்கு எதிரே தகரத்தினால் ஆன கூண்டில் மணி தொங்க விடப்பட்டிருந்தது. ஆலய வழிபாட்டு அறிவிப்புக்கான அழைப்பு மணியாக அது செயல்பட்டு வந்திருக்கின்றது. 1931–1940 முடிய உள்ள காலக்கட்டத்தில்தான் நம் பங்கில் திவ்ய நற்கருணைப் பவனி ஆரம்பமாகியுள்ளது.



1949 வரை அஸ்திவாரத்தோடு தடைபட்டு நின்றிருந்த நம் புதிய ஆலயப்பணியானது மீண்டும் துளிர்விட ஆரம்பித்தது. இலங்கையில் இருந்து வந்த கோதுமை, அவல், பால்மாவு போன்றவற்றை விற்று அதில் வந்த வருமானத்தில் நம் ஆலயக்கட்டுமானப் பணியானது நடைபெற்றது. நம் கோயில் கட்டுமானப்பணியில் நம் முன்னோர்களின் உடல் உழைப்பு மிக உன்னதமானது. நம் கோவிலின் வடபுறத்தில் அமைக்கப்பட்டிருந்த செக்கில் சுண்ணாம்புக்கல் மற்றும் மண்ணைக் குழைத்து உருவாக்கிய கலவையைக் கொண்டுதான் நம் ஆலயம் கம்பீரமாக உயர்ந்து நின்று நம் முன்னோர்களின் உழைப்பை இன்றும் பறைசாற்றிக் கொண்டு இருக்கின்றது. அந்த செக்கானது இன்றும் நம் ஆலய வளாகத்தில் இருப்பதை நாம் காணலாம்.

மேலும் அன்றைய காலக்கட்டத்தில் பங்குத்தந்தையாக இருந்த அருட்தந்தை. லூர்து அடிகளாரின் சீரிய முயற்சியால் ஆலயத்தின் வெளிப்புற மற்றும் உட்புறச் சுவர்கள் 1954க்குள் எழுப்பப்பட்டன. அதன்பிறகு தந்தை அவர்கள் உடல்நலம் குன்றியதால் பணிகள் மீண்டும் கிடப்பில் போடப்பட்டன. ஆலயத்தின் மேற்கூரைக்கும் பலிபீடத்திற்கும் மேல் அமைந்துள்ள




குவிந்த கூரை (Dome) வடிவிலான கான்கிரீட் அமைக்க வேண்டுமென திட்டமிடப்பட்டிருந்தது. ஆனால் அப்போதைய காலக்கட்டத்தில் நம் பகுதிகளில் நிலவிய பஞ்சம் மற்றும் நிதிப்பற்றாக்குறை காரணமாக அத்திட்டம் கைவிடப்பட்டது.



மீண்டும் சுமார் 10 ஆண்டுகள் கழித்து, விரைவில் ஆலயப் பணிகளை முடித்தே ஆக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் கான்கிரீட்டுக்குப் பதிலாக அஸ்பெஸ்டாஸ் சீட்டுகள் போடப்பட்டு ஆலயப்பணிகள் அவசர அவசரமாக முடிக்கப்பட்டன.

புதிய ஆலயமானது 1967 நவம்பர் 21 ஆம் தேதியன்று நம்முன்னோர்களின் சுமார் 54 ஆண்டுகால கடின உழைப்பாலும், நம் முன்னாள் பங்குத்தந்தையர்களின் ஜெபங்கள் மற்றும் ஒத்துழைப்பாலும் அருட்தந்தை. G. பிரான்சிஸ் அடிகளாரின் முன்னிலையில் தூத்துக்குடி மேற்றிராணியார் மேன்மை தங்கிய தாமஸ் பர்னாந்து அவர்களின் திருக்கரங்களினால் அர்ச்சிக்கப்பட்டு நம் ஊர் இறை மக்களுக்கு அர்ப்பணித்து வைக்கப்பட்டது. அந்த ஆலயமே தற்போது ''புதுமைகளின் நாயகியாம்'' பரிசுத்த பரலோக மாதா கம்பீரமாக வீற்றிருக்கும், நாம் வழிபட்டு வரும் புதிய ஆலயம் ஆகும்.

கோவிலுக்கு அருகில் (வடபுறம்) மணிக்கூண்டிற்கு அஸ்திவாரம் போடப்பட்டு பனைமரம் நட்டி அதில் மணியை தொங்க விடலாம் என முதலில் திட்டமிடப்பட்டது. இறுதியில் அத்திட்டம் கைவிடப்பட்டு சுடுகற்களாலேயே கட்டி முடிக்கப்பட்டது. ஆலய மணிக்கு ஞானத்தாய், ஞானத்தந்தை இருப்பது அக்கால வழக்கமாம். அதன்படி மணிக்கூண்டு அமைக்க உதவிய நம் மண்ணின் மைந்தர் திரு. வி.ச. மரிய மிக்கேல் நாடார், அவரது துணைவியார் திருமதி. மரிய சுந்தரம் அம்மாள் ஆகியோர் ஞானத்தகப்பனார், ஞானத்தாயாக விளங்க பங்குத்தந்தை அருட்திரு. பிரான்சிஸ் அடிகளாரால் ஆசீர்வதிக்கப்பட்டு இறைமக்கள் முன்னிலையில் புதிய மணிக்கூண்டில் புதிய மணி தொங்க விடப்பட்டது. இதற்கு முன்பு கொடிமரம் நிறுவப்பட்டுள்ள இடத்திற்கு அருகே அதாவது கொடி மரத்தின் காலடிக்கு தென்பகுதியில் பெரிய அளவில் நிரந்தர மேடை ஒன்று அமைந்திருந்தது. இந்த மேடையில் வைத்துதான் நற்கருணைப் பவனியின் போது இறுதியாக நற்கருணையானது வைக்கப்பட்டு ஆராதனை நடைபெற்றுள்ளது. அந்த மேடைக்கு 'நற்கருணை பந்தல்' என பெயர் விளங்கலாயிற்று. பின்னர் புதிய ஆலயம் எழுப்பப்பட்ட பின் இந்த 'நற்கருணை பந்தல்' மேடையானது நீக்கம் செய்யப்பட்டது.

மாவிலை மற்றும் குருத்து பனை ஓலைகளால் கொடிமரம் நடப்பட்டு கொடியேற்றம் நடைபெறும் பாரம்பரிய முறை வழக்கத்திலிருந்த அக்காலக்கட்டத்தில் கொடிமரம் நடும் நிகழ்வின்போது கொடிமரம் தடுமாறி சரிந்து கீழே விழுந்து விட்டது. அப்பொழுது பங்குத்தந்தையாக பணியாற்றிய (1972-1978) அருட்தந்தை. குரூஸ் மரியான் அடிகளாரின் சீரிய முயற்சியினால் கேரளாவில் இருந்து நம் ஆலயத்திற்கு புதிய கொடிமரம் கொண்டு வரப்பட்டது.



அந்த கொடி மரத்தில் மாதாவை நினைவூட்டும் வகையில் நீல வண்ணம் பூசப்பட்டிருந்தது. மேலும் கொடிமரத்தை நிலைநிறுத்த கொடிமர திண்டு ஒன்று கட்டப்பட்டது. அதன்பின்னர் ஒவ்வொரு ஆண்டும் ஒன்றாம் திருவிழாவின்போது மாலையில் பங்குத்தந்தை இல்லத்திலிருந்து கொடிமரமானது, ஊர் மக்களால் தோளில் வைத்து (தாய் மரத்தை ஊர் பெரியவர்கள், பிள்ளைக்கொடி மரத்தைச் சிறுவர்கள்) தூக்கி வருவர். மரமானது நெடுஞ்சாண்கிடையாக உரல்கள் மீது கிடத்தப்பட்டிருக்கும். பெண்கள் தங்கள் வீடுகளில் தயாராக வைத்திருக்கும் புதிய குடங்களில் நீரைச்சுமந்து வந்து கொடிமரத்தில் ஊற்ற கொடிமரம் சுத்தம் செய்யப்படும். இந்நிகழ்வே மிகப்பெரிய சடங்காக அன்றைய காலக்கட்டத்தில் நிகழ்த்தப்பட்டது.

பின்னர் கொடிமரத்தின் 4 பக்கங்களில் பாரக்கயிறுகள் கட்டி நான்கு புறமும் இருந்து மக்களால் கயிறுகள் இழுக்கப்பட கொடிமரம் மேலாக எழும்பிச் செல்லும். அம்மரம் கொடிமரத்திண்டை வந்தடைந்தவுடன் கயிறு இழுப்பதை நிறுத்திவிடுவர். கொடிமர திண்டுக்குள் கொடிமரம் நிலைநிறுத்தப்படும். திருவிழா முடிந்தவுடன்

கொடிமரம் இறக்கப்பட்டு (அதுவும் ஓர் சிறப்பான நிகழ்வுதான்) மீண்டும் பங்குத்தந்தை இல்லத்திற்கு கொண்டு சென்று பாதுகாப்பாக வைக்கப்படும். இந்நிகழ்வுகள் நம் சபைக்கு மட்டுமல்ல நம் ஊர்க்கே பெருமை சேர்ப்பதாக அமைந்திருந்தது.

அதுபோல திருவிழாவின்போது புனிதர்களைத் தாங்கிய சப்பரங்களை சப்பர வீதிகளில் தோளில் சுமந்து வருவதை நம் முன்னோர்கள் வழக்கமாக வைத்திருந்தனர் என்பது நாம் அறிந்ததே. அவ்வாறு 1977 ஆம் ஆண்டு 10ஆம் திருவிழாவின்போது சப்பரங்களைத் தோளில் சுமந்து வரும்போது பரலோகத்தாயின் சப்பரம் மின்கம்பியில் உரசியதால் அதன் உச்சி பகுதி சேதம் அடைந்ததுடன் சப்பரமும் சரிந்துவிட்டது. உடனே மாதா சொரூபத்தை சப்பரத்தில் இருந்து எடுத்து சூசையப்பர் சப்பரத்தில் வைத்து பவனியைத் தொடர்ந்தனர். அந்நிகழ்வு மக்கள் மனதில் குழப்பத்தையும், கலக்கத்தையும் உருவாக்கியது.

அப்போதைய பங்குத்தந்தை அருட்தந்தை. குரூஸ்மரியான் அடிகளாரின் முயற்சியினால் பெரிய தேர் செய்ய முடிவெடுத்து 1978, ஆகஸ்ட் 15-ல் புதிய தேரானது அர்ச்சிக்கப்பட்டது. அதன்பின்புதான் ஒரே தேரின் நடுவில் நம் பாதுகாவலியும், இருபுறங்களிலும் புனித சூசையப்பர், புனித அந்தோணியார் சொரூபங்கள் வைக்கப்பட்டு மக்கள் வடம் பிடித்து இழுக்கும் தேர்ப்பவனி உதயமானது.

பழைய கோவில் உதயமான 1880ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15 ஆம் நாள் நம் பங்கின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய நாள். ஏனெனில் பல்வேறு எதிர்ப்புகளை மீறி இம்மண்ணில் நம் கத்தோலிக்க திருச்சபை காலூன்ற காரணமான நம்கோயில் புதுப்பொலிவு பெற்ற நாள் ஆகும். நம் முன்னோர்களின் கடின உழைப்பாலும், அயராத ஜெபத்தாலும் உயர்ந்து நின்ற இக்கோவிலின் வல்லமையைக் கட்டிக்காக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் ஆலயத்தின்

நூற்றாண்டை (1880-1980) பின்வரும் சந்ததியினரும் அறிந்து கொள்ளும் வகையிலும், கோவிலுக்கு மகிமை ஏற்படுத்தும் வகையிலும் ஆலயம் அமைந்திருந்த இடத்தில் ஓர் கெபியைக்கட்ட வேண்டும் என அப்போதைய பங்குத்தந்தை பங்கிராஸ் M. ராஜா அடிகளார் முடிவெடுத்தார். அதனடிப்படையில் மக்களின் பேராதரவுடன் நம் பழைய ஆலயத்தின் நினைவாக நூற்றாண்டு கெபி கட்டப்பட்டது. அக்கெபி இன்றும் 'நூற்றாண்டு கெபி' என்றே அழைக்கப்படுகிறது. இந்நூற்றாண்டு கெபியானது 11.08.1983ல் அன்றைய பங்குத்தந்தை பங்கிராஸ் M. ராஜா அடிகளாரின் திருக்கரங்களால் அர்ச்சிக்கப்பட்டது. 1992ம் ஆண்டு புதிய ஆலயத்தின் 25ம் ஆண்டு வெள்ளி விழா நிறைவையொட்டி மாதா பீடம் மற்றும் சூசையப்பர் பீடம் புதுப்பிக்கப்பட்டது.



ஒன்று முதல் எட்டாம் வகுப்பு வரை செயல்பட்டுக்கொண்டு இருந்த நம் மரியன்னை நடுநிலைப்பள்ளிக்குப் புதிய கட்டிடம் கட்ட அப்போதைய பங்குத்தந்தை எட்வர்ட் ஜே. அடிகளாரால் பங்குத்தந்தை இல்லத்தில் அடிக்கல் நாட்டப்பட்டு, 17.06.1995ல் பள்ளியானது கட்டி முடிக்கப்பட்டு தூத்துக்குடி மறை மாவட்டத்தின் அப்போதைய ஆயர் பதிலாள் மேன்மைமிகு. பீற்றர் ஆண்டகை தலைமையில் திறக்கப்பட்டு கல்வி பணிக்காக அர்ப்பணிக்கப்பட்டது. உயர்நிலைப்பள்ளிக்கு நிகரான கட்டிட தோற்றத்துடன் இன்றளவும் கல்விப்பணியை தொடர்ந்து ஆற்றி வருகிறது.

1999ல் நம் ஊரில் நிகழ்ந்த தொடர் மரணங்களால் மக்கள் அச்சத்தில் உறைந்துபோய் இருந்த வேளையில் நம்மைப்பாதுகாக்க ஓர் பாதுகாவலர் நமக்கு தேவை என்ற எண்ணம் உதயமானது. அதன் விளைவாக உதித்தது தான் புனித மிக்கேல் அதிதூதர் கெபி ஆகும்.

அதன்படி நமது ஆர்.சி. காம்பவுண்டின் மையப்பகுதியில், கொடி மரத்தின் எதிரில் தேர்ப்பறையின் அருகில் இந்த கெபி கட்டப்பட்டது. நடுவில் புனித மிக்கேல் அதிதூதர் சொரூபமும், மேல்பகுதியில் அந்தோணியார் சொரூபமும் வைக்கப்பட்டது. இந்த கெபியானது 14.08.1999ல் அப்போதைய பங்குத்தந்தை அருட்தந்தை. M. தாமஸ் அடிகளாரால் மந்திரிக்கப்பட்டு திறந்து வைக்கப்பட்டது. அதே ஆண்டில் புனித மிக்கேல் அதிதூதர் நாளான செப்டம்பர் 29ல் மக்களுக்கு கெபியில் வைத்து அன்னதானம் வழங்கப்பட்டது. அதுமுதல் தற்பொழுதுவரை ஒவ்வொரு ஆண்டும் அசன வைபவமாக தொடந்து நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது.

இவ்வாறு பங்கு ஆன்மீகத்திலும், வழிபாடுகளிலும் வளர்ச்சி அடைந்து தூத்துக்குடி மறைமாவட்டத்தில் ஓர் சிறப்பிடத்தை நம்பங்கு பெற்றது. இதன் விளைவாகவும் அப்போதைய பங்குதந்தை அருட்தந்தை. ஜாக்சன் அடிகளாரின் சீரிய முயற்சியாலும் நம் ஊருக்கு பெருமை சேர்க்கின்ற வகையில் ஒரு மாபெரும் கல்யாண மண்டபம் கட்ட அனுமதி கிடைத்தது. St. மேரீஸ் மஹால் என்ற பெயரில் அம்மண்டபம் அஸ்திவாரத்துடன் ஆரம்பமானது. வேகமாக வளர்ந்து வந்த இம்மண்டப உருவாக்கம் சில பல காரணங்களினால் தொய்வு அடைந்தது.

இந்நிலையில் அருட்திரு. ஜாக்சன் அடிகளாரின் கவனம் நம் புதிய ஆலயம் பக்கம் திரும்பியது. ஆம்! நம் ஆலயத்தின் தரைப்பகுதி முழுவதும் மார்பிள் கற்களால் புதுப்பிக்கப்பட்டது. இது ஒருபுறம் நடக்க மறுபுறம் பலிபீடமும், ஆல்டர் பகுதியும், திருச்சிலுவையைத் தாங்கியிருக்கும் பகுதியும், ஆலய மண்டபமும் புதுப்பிக்கப்பட்டு, புதுப்பொலிவு அடைந்தன. அது மட்டுமல்ல ஆலயத்தின் முன்புறம் பிரதான சாலையின் ஓரத்தில் ஆரோக்கிய அன்னைக்கு அழகியதோர் கெபி எழுப்பப்பட்டது. இவையனைத்தும் 14.08.2004ல் அர்ச்சிக்கப்பட்டன. இவை அனைத்தும் நம் ஆலயத்தை இன்றுவரை அலங்கரித்துக் கொண்டு இருக்கின்றன.

2005ல் நம் ஆலயத்திருவிழாவைத் தொடங்குவதற்காக ஒன்றாம் திருவிழா அன்று கொடிமரம் ஏற்றப்படும்போது கயிறு நழுவி கொடிமரம் சேதமடைந்து கீழே விழுந்து அனைவரையும் சோகத்தில் ஆழ்த்தி விட்டது. உடனடியாக சரிசெய்யப்பட்டு திருவிழா தடைபடாமல் நடந்தேறியது. ஆனால் இந்நிகழ்வு மக்களிடையே மனவேதனையை உண்டாக்கியது. உடனே இதை அறிந்த பங்குத்தந்தை ஜாக்சன் அடிகளார் அதே இடத்தில் நிலையான இரும்பாலான கொடி மரத்தை அமைக்க உறுதி பூண்டார். மக்களும் அச்செயலுக்கு இணங்கவே இறைமக்கள் சார்பாக புதியதொரு கம்பீரமான இரும்பாலான நிலைத்த கொடிமரம் உருவாக்கப்பட்டது. இன்றுவரை அம்மரம் கம்பீரமாக நின்று கொண்டிருக்கின்றது. இக்கொடிமரத்தில் முதன்முறையாக 06.08.2006ல் கொடியேற்றப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரை அதே மரத்தில்தான் கொடியேற்றப்பட்டு வருகிறது.

நம் ஊர்க்கு பெருமை சேர்க்கும் என்று எதிர்பார்த்த St. மேரீஸ் மஹால் பணிநடைபெறாமல் நின்றிருந்த சூழலில் அப்போது பங்குத்தந்தையாக பணியாற்றி வந்த அருட்தந்தை A.S. ராஜா அடிகளார் மஹாலில் முதல் மாடி வரை கட்டிடத்தை வெகு சிரமங்களுக்கு மத்தியில் உயர்த்தினார்கள்.

இம்மண்டபம் கட்டுவதற்காக பழைய கோவில் மற்றும் கெபி அகற்றப்பட்டன. பழைய கோவிலுக்கு சொந்தமான மணிக்கூண்டும், பள்ளிக்கட்டிடமும் அகற்றப்பட்டன. பழைய கோவிலின் புராதன சின்னமாக விளங்கிய கெபியையும் அகற்றியிருந்ததால் மீண்டும் அதே இடத்தில் அற்புத கெபி ஒன்று கட்டாயம் எழுப்பியே தீர வேண்டும் என்ற கோரிக்கை மக்களிடையே எழுந்தது. எனவே மக்களின் எண்ணத்தை பூர்த்தி செய்யும் வகையிலும், நூற்றாண்டு கெபி கட்டப்பட்டதன் 25வது ஆண்டை நினைவுகூறும் வகையிலும் புதிய நூற்றாண்டு கெபி எழுப்பப்பட்டது.

14.08.2007 அன்று அப்போதைய பங்குத்தந்தை அருட்திரு. A.S. ராஜா அடிகளாரால் புதிய கெபி மந்திரிக்கப்பட்டு மக்கள் வழிபட வழி வகை செய்யப்பட்டது. அருட்தந்தை A.S. ராஜாவைத் தொடர்ந்து பங்குத்தந்தையாகப் பணியாற்றிய அருட்தந்தை P.K. அந்தோணி டக்ளஸ் அடிகளாரின் அயராத உழைப்பால் **St.** மோரீஸ் மஹால் முழுவதுமாக கட்டிமுடிக்கப்பட்டு நம் பரலோகத்தாயின் பெருநாளான 15.08.2013ல் அன்றைய தூத்துக்குடி மறைமாவட்ட ஆயர் மேதகு. இவான் அம்புரோஸ் ஆண்டகையால் ஆசீர்வதிக்கப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

அதன்பின்னர் பழைய கோவில் இருந்த இடத்தில் மறைந்த அருட்தந்தையும், மண்ணின் மைந்தருமான அருட்பணி ம. பீற்றர் அடிகளாரால் 04.11.2012 அன்று அடிக்கல் நாட்டப்பட்ட புனித அந்தோணியார் கெபி கட்டி முடிக்கப்பட்டு, அப்போதைய பங்குத்தந்தையாக இருந்த அருட்திரு. அருள் பிரபாகர் அடிகளாரால் 21.11.2016ல் அர்ச்சித்து திறந்து வைக்கப்பட்டது.

மேலும் புதிய ஆலயம் கட்டப்பட்டதன் 50 ஆண்டு நிறைவையும் (1967-2017), நம் ஊரின் தேர் வடிவமைக்கப்பட்ட 40 ஆண்டு நிறைவையும் கொண்டாடும் விதமாக நம் பரலோகத்தாயின் அற்புதத்தேரின் உயரம் உயர்த்தப்பட்டு, புதுப்பிக்கப்பட்டு அப்போதைய பங்குத்தந்தை அருட்தந்தை. அந்தோணி இருதய தோமாஸ் அடிகளாரால் அர்ச்சிக்கப்பட்டு, பவனியாக இழுத்து வரப்பட்டது.

பழமை வாய்ந்த நமது பங்குத்தந்தையர்கள் இல்லத்தை புதுப்பிக்க இயலாத நிலையில் இருந்ததினால் புதிய பங்குத்தந்தையர்களின் இல்லம் கட்டப்பட தீர்மானிக்கப்பட்டு, அப்போதைய பங்குத் தந்தை அருட்தந்தை. அந்தோணி இருதய தோமாஸ் அடிகளாரின் முயற்சியினால், 17.06.2018 அன்று அருட்தந்தை. பங்கிராஸ் **M.** ராஜா அடிகளாரால் அடிக்கல்

நாட்டப்பட்டது. வாயில் நிலையானது மேதகு ஆயர் இவோன் அம்புரோஸ் (முன்னாள் ஆயர்) ஆண்டகையால் 15.08.2018 அன்று அர்ச்சிக்கப்பட்டு, தூத்துக்குடி மறை மாவட்ட ஆயர் மேதகு அ. ஸ்டீபன் ஆண்டகையால் தூய மரியின் மாசற்ற இருதய விழாவான 29.06.2019 அன்று ஆசீர்வதித்து திறந்து வைக்கப்பட்டது.

தற்போது அருட்திரு. தா. சலேட் ஜெரால்டு அவர்களால் ஜெபமாலை தோட்டம் 02.10.2022 அன்று அடிக்கல் நாட்டப்பட்டு பணிகள் நடைபெற்று வருகிறது. இந்த பணிகள் விரைவாக முடிக்கப்பட இறைவனிடம் மன்றாடுவோம்.

இவ்வாறு வானளாவ உயர்ந்து பல்வேறு பெருமைகளைத் தாங்கி நிற்கும் இப் பிரகாசபுரம் பங்கில் நாமும் ஓர் அங்கத்தினராக இருப்பதில் பெருமை கொள்வோம். மேலும் இப்பங்கை மென்மேலும் வளர்த்தெடுக்க உறுதி ஏற்போம்.

வளர்ச்சிக்கான அருள் வரங்களையும், பொருள் வளங்களையும் இறை மகன் இயேசு கிறிஸ்துவிடம் பெற்றிட நம் பாதுகாவலியாம் பரிசுத்த பரலோக மாதா வழியாக மன்றாடி பெறுவோம். நம் தாயும் கருணைக்கண் கொண்டு நம்மை நோக்கி நமக்கு வரங்களைத் தருவாராக.! மரியே வாழ்க!!

*மன்றாடுங்கள் மகிழ்வடைவீர்! நம்புங்கள் நலம் பெறுவீர்!!*

## துணை நின்றவை


1. தூத்துக்குடி மறை மாவட்ட வரலாறு– 1973
2. தூத்துக்குடி மறை மாவட்டக் கையேடு (பொன்விழா கையேடு) –1973
3. பிரகாசபுரம் பங்கு வைரவிழா மலர் 1984
4. பிரகாசபுரம் பரலோக மாதா ஆலய வெள்ளி விழா மலர் –1992
5. https://jesuitonlinenecrology.bc.edu/catalog/33665
6. https://mdusj.org/index.php/who-we-are/our-history
7. மதுரா மிஷன் கையேடு
8. St. Mary's Mahal திறப்பு விழா மலர் - 2013
9. https://www.church.catholictamil.com/p/458.html?m=1

**பிரகாசபுரம் பரிசுத்த பரலோக அன்னையின் ஆலயத்திருவிழா ஆகஸ்ட் 6ம் தேதி கொடியேற்றம் முதல் ஆகஸ்ட் 15ம் தேதி தேர்பவனி வரை 10 நாட்கள் வெகு விமரிசையாக நடைபெற்று வருகிறது.**

நம் பங்கின் சார்பாக வருடத்திற்கு மூன்று முறை அசனம் எனும் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

1. பரிசுத்த பரலோக மாதா ஆலயம் - மே முதல் சனி
2. பரலோக மாதா அற்புத கெபி - ஆகஸ்ட் 16
3. புனித மிக்கேல் அதிதூதர் கெபி - செப்டம்பர் 29

## பிரகாசபுரம் பங்கின் திருவிழாக்கள்

1. பரிசுத்த பரலோக அன்னை ஆலயம் - ஆகஸ்ட் 06 முதல் ஆகஸ்ட் 15 வரை
2. பரலோக மாதா அற்புத கெபி - ஆகஸ்ட் 16
3. புனித மிக்கேல் அதிதூதர் கெபி - செப்டம்பர் 20-29
4. ஆரோக்கிய மாதா கெபி - செப்டம்பர்-08
5. அந்தோணியார் கெபி - ஜுன் 13
6. சூசையப்பர் கெபி (கன்னியர் இல்லம்) - மார்ச் 19

## கிளை பங்குகள்

1. தோப்பூர்
2. மாதாவனம்
3. பிள்ளையன்மனை
4. உடையார்குளம்
5. தேமான்குளம்
6. குறிப்பன்குளம்
7. கந்தசாமிபுரம்

## வரலாற்று சுவடுகள்

**1800**

18ம் நூற்றாண்டு (பரலோக தாய்க்காக கூரைக்கோவில் எழுப்பப்பட்டது)

**1831**

'புதூர்' என்ற பெயர் 'பிரகாசபுரம்' என்று மாறியது)

**1879**

பிரகாசபுரத்தில் 14 கத்தோலிக்க குடும்பங்கள் வசித்து வந்தது.

**1880**

நமது தாயாகிய பரிசுத்த பரலோக அன்னை சொரூபம் பிரகாசபுரம் வந்தடைந்தது.

**1880 ஆகஸ்ட் 15**

கூரைக்கோவில் புதுப்பிக்கப்பட்டு ஓடு போட்ட மண் கோவிலாக திறந்து வைக்கப்பட்டது.

**1880 ஆகஸ்ட் 15**

பரலோக தாய்க்காக முதல் திருவிழா ஏறெடுக்கப்பட்டது

**1887**

பிரகாசபுரம் தனிப்பங்காக உருவானது

**1895 ஆகஸ்ட் 15**

முதன்முதலாக தாய்க்காக சப்பரத் திருவிழா நடத்தப்பட்டது.

**19ம் நூற்றாண்டு**

சவுக்கு மரத்தில் குருத்து பனை ஓலைகளையும், மாவிலைகளையும் கட்டி திருவிழா கொண்டாடப்பட்டது.

**1907**

நாசரேத்தின் தந்தை மர்காஷிஸ் ஐயர் தனது ஜெப அறையில் வைத்து வணங்கிய இயேசுவின் பாடுபட்ட சுரூபம் தேவ அன்னை சுரூபம் என 3 சுரூபங்களை நம் ஆலயத்திற்கு வழங்கினார்

**1913**

அசனம் எனும் முதல் அன்னதானம் நடத்தப்பட்டது.

புதிய ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டது.

**12 ஜுன் 1923**

தூத்துக்குடி மறைமாவட்டம் உருவாக்கப்பட்டது.

**1929**

புனித மரியன்னை தொடக்கப் பள்ளி தொடங்கப்பட்டது.

**1931-1940**

புனித மரியன்னை பள்ளி நடுநிலைப் பள்ளியாக தரம் உயர்த்தப்பட்டது. **(1939)**

முதல் திவ்ய நற்கருணை பவனி நடத்தப்பட்டது.

**21 நவம்பர் 1967**

பரிசுத்த பரலோக அன்னையின் புதிய ஆலயமானது எழுப்பப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

**1967**

மணிக்கூண்டு கட்டப்பட்டது.

**1972-1978**

மரத்தால் ஆன கொடிமரத்தில் கொடியேற்றி திருவிழா கொண்டாடப்பட்டது

**15 ஆகஸ்ட் 1978**

முதல் தேர் திருவிழா கொண்டாடப்பட்டது.

**1983 ஆகஸ்ட் 11**
மாதாவின் நூற்றாண்டு அற்புத கெபி எழுப்பப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

**ஆகஸ்ட் 14 1999**
அதிதூதர் மிக்கேல் கெபியானது எழுப்பப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

**29 செப்டம்பர் 1999**
அதிதூதர் மிக்கேல் கெபி அசனம் நடத்தப்பட்டது.

**2003**
St. Mary's Mahal-க்கு அடிக்கல் நாட்டப்பட்டது.

**2004 ஆகஸ்ட் 14**
வேளாங்கண்ணி மாதா கெபி எழுப்பப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

ஆலய பலிபீடம் புதுப்பிக்கப்பட்டது.

**ஆகஸ்ட் 6 2006**
இரும்பினால் ஆன கொடிமரத்தில் கொடியேற்றி திருவிழா கொண்டாடப்பட்டது.

**2007 ஆகஸ்ட் 14**
மாதாவின் நூற்றாண்டு அற்புதக் கெபி புதுப்பிக்கப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

**ஆகஸ்ட் 15 2013**
St. Mary's Mahal திறந்து வைக்கப்பட்டது.

**2016 நவம்பர் 21**
புனித அந்தோணியார் கெபியானது எழுப்பப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.

**ஆகஸ்ட் 14 2017**
தேரின் உயரம் உயர்த்தப்பட்டு புதுப்பிக்கப்பட்டது.

**2019 ஜூன் 29**
புதிய பங்குத்தந்தையர்களின் இல்லம் திறக்கப்பட்டது.

## பங்கில் பணியாற்றிய குருக்கள்

### தனிப்பங்காக உருவெடுப்பதற்கு முன்

| | | |
|---|---|---|
| 1. | அருட்தந்தை Fr. டையோனிஷியஸ் குஷன் | (1880 - 1887) |

### தனிப்பங்காக உருவெடுத்தபின்

| | | |
|---|---|---|
| 2. | அருட்தந்தை Fr. நிக்கோலஸ் | (1887 - 1909) |

### தனிப்பங்காக முறைப்படி செயல்பட தொடங்கிய பின்

| | | |
|---|---|---|
| 3. | அருட்தந்தை Fr. E. மாஸ் | (1909 - 1911) |
| 4. | அருட்தந்தை Fr. T. மிக்கேல் | (1911 - 1919) |
| 5. | அருட்தந்தை Fr. சிக்காது | (1919 - 1921) |
| 6. | அருட்தந்தை Fr. A. அடைக்கலம் | (1921 - 1931) |
| 7. | அருட்தந்தை Fr. M.S. மரியான் | (1931 - 1940) |
| 8. | அருட்தந்தை Fr. சேவியர் மெல் | (1940 - 1945) |
| 9. | அருட்தந்தை Fr. M. பெர்னான்டோ | (1945 - 1947) |
| 10. | அருட்தந்தை Fr. J.V. பூபால்ராயர் | (1947 - 1949) |
| 11. | அருட்தந்தை Fr. லூர்து நாதர் | (1949 - 1954) |
| 12. | அருட்தந்தை Fr. FX. சிங்கராயர் | (1954 - 1956) |
| 13. | அருட்தந்தை Fr. ரொசாரியோ கொரேரா | (1956 - 1959) |
| 14. | அருட்தந்தை Fr. கபிரியேல் | (1959 - 1961) |
| 15. | அருட்தந்தை Fr. பங்கிராஸ் | (1961 - 1965) |
| 16. | அருட்தந்தை Fr. D.J.C. அமிர்தம் | (1965 - 1966) |
| 17. | அருட்தந்தை Fr. G. பிரான்சிஸ் | (1966 - 1972) |
| 18. | அருட்தந்தை Fr. குரூஸ் மரியான் | (1972 - 1978) |
| 19. | அருட்தந்தை Fr. பங்கிராஸ் M. ராஜா | (1978 - 1982) |
| 20. | அருட்தந்தை Fr. ஜோசப் ரத்தினராஜ் | (1982 - 1984) |
| 21. | அருட்தந்தை Fr. ஜெரோசின் A. கற்றார் | (1984 - 1985) |
| 22. | அருட்தந்தை Fr. ஜோசப் லடிஸ்லாஸ் | (1985 - 1986) |
| 23. | அருட்தந்தை Fr. ஜோசப் அமல்ராஜ் | (1986 - 1990) |
| 24. | அருட்தந்தை Fr. எட்வர்ட் J. | (1990 - 1995) |
| 25. | அருட்தந்தை Fr. M. ஜெபநாதன் | (1995 - 1997) |
| 26. | அருட்தந்தை Fr. தாமஸ் | (1997 - 2002) |
| 27. | அருட்தந்தை Fr. ஜாக்சன் M. அருள் | (2002 - 2007) |
| 28. | அருட்தந்தை Fr. A.S. ராஜா | (2007 - 2012) |

29. அருட்தந்தை Fr. P.K. அந்தோணி டக்ளஸ் (2012 - 2016)

30. அருட்தந்தை Fr. அருள் பிரபாகர் (2016 - 2017)

31. அருட்தந்தை Fr. A. அந்தோணி இருதய தோமாஸ் (2017 - 2022)

32. அருட்தந்தை Fr. சலேட் ஜெரால்டு (2022 முதல் தற்போது வரை)

## பிரகாசபுரம் பங்கு தந்த குருக்கள்

1. அருட்தந்தை Fr. S. மரிய ஜெயராஜ்
2. அருட்தந்தை Fr. T. விக்டர்
3. அருட்தந்தை Fr. M. மார்ட்டின் மனுவேல்
4. அருட்தந்தை Fr. M. பீற்றர்
5. அருட்தந்தை Fr. G. அலெக்ஸ் மரிய செல்லையா
6. அருட்தந்தை Fr. A. அமல் ஒயிட் ராஜா
7. அருட்தந்தை Fr. S. அருண்குமார்

## பிரகாசபுரம் பங்கு தந்த அருட் சகோதரிகள்:

1. அருட்சகோதரி Sr. கொன்ராத் மேரி
2. அருட்சகோதரி Sr. ஆஞ்சலிக்கா
3. அருட்சகோதரி Sr. ஓலேப் ஜாண் மேரி
4. அருட்சகோதரி Sr. மார்த்தா மேரி
5. அருட்சகோதரி Sr. நீரை மேரி
6. அருட்சகோதரி Sr. வியாகுலமரியாள்
7. அருட்சகோதரி Sr. அலகோக் மேரி
8. அருட்சகோதரி Sr. விமலா மேரி
9. அருட்சகோதரி Sr. லூஸியா மெலானி
10. அருட்சகோதரி Sr.லூஸியா அந்தோணி டெய்சி
11. அருட்சகோதரி Sr. ஜஸீந்தா ஜேஸ்பின் மேரி
12. அருட்சகோதரி Sr. மார்த்தா மேரி
13. அருட்சகோதரி Sr. நினா மேரி
14. அருட்சகோதரி Sr. கரோலின்
15. அருட்சகோதரி Sr. எபனேசர்
16. அருட்சகோதரி Sr. அனி மேரி புனிதா

ஓலைக்கூரையோடு காட்சியளித்த நம் பரிசுத்த பரலோக மாதா ஆலயம்
1880-ல் ஓடுபோட்ட மண் கோயிலாக எழுப்பப்பட்டதன் கம்பீரத் தோற்றம்



1929-ல் உதயமான நம் புனித மரியன்னை தொடக்கப்பள்ளி 1939-ல் நடுநிலைப்பள்ளியாக
தரம் உயர்ந்து பழைய கோவிலின் அருகில் (தற்பொழுது St.மேரீஸ் மஹால் அமைந்துள்ள இடம்)
இயங்கிவந்த போது எடுக்கப்பட்ட அரிய புகைப்படம்



